[19th August 1961

இடங்களில் கட்டிடம் கட்ட ஆரம்பிக்கிறோம். எந்தெந்த இடத்தில் உடனடியாகக் கட்டுவது நல்லது, எந்த இடங்களை 'ரிஸர்வ்'-வாக வைத்துக் கொள்ளலாம் என்பதைப் பார்த்துத்தான் காரியங்கள் செய்கிறோம்.

### *Causeway across Goddar*

* 1260 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to construct a causeway over Goddar on Nariyambattu-Mailpatti Road in Gudiyatham taluk to facilitate transport of sugarcane to the sugar factory in Pachakuppam?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A request made by a sugar mill to this effect is under the consideration of the Highways Department.

SRI A. A. RASHEED : Sir, since the monsoon is fast approaching, will the Government take up the work at least during this year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Chief Engineer, Highways, is looking into the matter.

### *Adhirampattinam Port*

* 1261 *Q.*—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether representations have been received by the Government from the residents of Adhiramapattinam regarding improvements to the port at that place; and

(*b*) if so, the steps taken in this regard?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**SRI R. SRINIVASA IYER :** கனம் மந்திரி அவர்கள், 'அதிராம் பட்டின வாசிகளிடமிருந்து மனுக்கள் வரவில்லை' என்று சொல்லி விட்ட பிறகு மேற்கொண்டு சொல்வதில் பிரயோஜனம் இல்லை. மூன்றாவது திட்ட காலத்தில் கீழ்க் கடலோரப் பகுதியிலிருக்கும் 'மைனர் போர்ட்'-களை அபிவிருத்தி செய்வதற்காக 18 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாகத் திட்டத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதிராம்பட்டினத் துறைமுகத்திலிருந்து தேங்காய், விறகு, உப்பு போன்ற முக்கியமான பொருள்கள் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டன. இப்பொழுது அது அடைபட்டிருப்பதால், அதை நல்ல முறையில் செப்பனிட்டு அபிவிருத்தி செய்ய மூன்றாவது திட்டத்தில் முயற்சி எடுக்கப்படுமா ?

**THE HON. SRI P. KAKKAN :** கீழ்க் கடலோரப் பகுதியில் இருக்கும் சிறிய துறைமுகங்களை அபிவிருத்தி செய்வதற்காக, கனம் அங்கத்தினர் சொன்னபடி, மூன்றாவது திட்டத்தில் நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. கடலூர், நாகப்பட்டினம், தூத்துக்குடி,

19th August 1961]

பரங்கிப்பேட்டை, அதிராம்பட்டினம், பாம்பன், தனுஷ்கோடி கீழக்கரை, தொண்டி, கொளச்சல், குலசேகரப்பட்டினம் துறை முகங்கள் பற்றி அரசாங்கம் முக்கியமாகக் கவனம் செலுத்தி வருகிறது. கடலூர்—நாகப்பட்டினம் ஒரு இன்டர்மீடியெட் கோர்ஸ். அதற்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கிறோம். இப்பொழுதிருக்கும் நிலைமையில், அதிராம்பட்டினம் துறைமுகம் ரொம்ப நாளாகத் தூர்ந்துபோயிருக்கிறது ; எந்தவிதமான போக்குவரத்தும் கிடையாது. அதை எடுத்துக்கொள்வதா, வேண்டாமா என்பதைப் பரிசீலனை செய்ததில் சரியான முடிவு இல்லை என்பதைக் கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*Bridge across Vaigai*

SRI N. R. THIAGARAJAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, திண்டுக்கல் ஹைவேஸ் டிவிஷன், வத்தலக்குண்டு, ராமிநாயக்கன்பட்டி, காமாக்ஷிபுரம் அருகே வைகையில் ஒரு புதுப்பாலம் கட்டத் திட்டமிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The proposals are under the consideration of the Highways Department.

*Arooran Sugar Factory*

* 1263 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சாவூர் மாவட்டம், வடபாதிமங்கலத்திலுள்ள ஆரூரான் சர்க்கரை ஆலைத் தொழிலாளருக்கும் நிர்வாகத்தாருக்கு மிடையே ஏற்பட்ட தகராறு சம்பந்தமாக தஞ்சாவூர் நல்லுறவு அதிகாரியிடமிருந்து அறிக்கை ஏதேனும் அரசினருக்கு வந்துள்ளதா ?

(இ) அப்படியானால், அதன் மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes; Sir.

(*b*) Orders have since been issued in the matter. The Union has been informed that as the recommendations of the Wage Board for Sugar Industry are to be implemented in this factory, the issues need not be referred for adjudication.

SRI V. K. KOTHANDARAMAN : இப்பொழுது அங்குள்ள தொழிலாளர்களுக்கும் நிர்வாகத்தினருக்கும் உள்ள உறவு கெட்டிருக்கிறது என்பது உண்மையா ? அது சம்பந்தமாக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ஆலையில் ஒரு நிரந்தரத் தொந்தரவு இருக்கிறதாக நான் நினைக்கிறேன். இந்தக் கேள்வி போடுகிறபோது என்ன தொல்லை அங்கு இருந்ததோ